இந்நிரலில் எதனையும் எழுதுதல் ஆகாது.

3. (A) உயிர் வளங்களின் நீடித்து நிலைத்த பயன்பாட்டினை ஆட்சிசெய்யும் **இரண்டு** காரணிகளைத் தருக.

(1) **சூழல் மாசடைதல், சனத்தொகைப் பெருக்கம், வர்த்தக பயிர்ச்செய்கை**

(2) **ஆக்கிரமிப்பு பேதங்கள், உயிர்ப்பல்வகைமையின் மிகை நுகர்வு**

(B) (i) எமதுசூழல் இயற்கையானதும் மனிதனால் உருவாக்கப்பட்டதுமான சூழல் தொகுதிகளை கொண்டிருக்கின்றது. இயற்கையான சூழல் தொகுதிக்கும் மனிதனால் உருவாக்கப்பட்ட சூழல் தொகுதிக்கும் **இரண்டு** உதாரணங்கள் வீதம் தருக.

| இயற்கையான சூழல் தொகுதி | மனிதனால் உருவாக்கப்பட்ட சூழல் தொகுதி |
|---|---|
| (1) **காட்டு ஈரநிலம்** | (1) **பூந்தோட்டம், தேயிலைத் தோட்டம்** |
| (2) **சதுப்பு நிலம்** | (2) **குளம், குட்டம், வயல்** |

(ii) ஆபத்துக்குள்ளாகியிருக்கும் இனங்களைப் பாதுகாப்பதற்காக உள்நிலை (in-situ) மற்றும் வெளிநிலைக் (Ex-situ) காப்புகள் பயன்படுத்தப்படுகின்றன. இலங்கையில் வெளிநிலைக் காப்பிற்காக உருவாக்கப்பட்ட **இரண்டு** இடங்களின் பெயர்களைத் தருக.

(1) **விலங்கியற் பூங்கா, aquariam**

(2) **தாவரவியற் பூங்கா, பரம்பரையலகு வங்கி, வித்து வங்கி**

(C) வன விலங்குகளால் செய்யப்படும் சூழல் ரீதியில் முக்கியத்துவம் வாய்ந்த **இரண்டு** சேவைகளைப் பெயரிடுக.

(1) **காய் மற்றும் வித்து பரம்பல், மகரந்த சேர்க்கை, பதார்த்த சுழற்சி**

(2) **உயிரியல் பீடைக் கட்டுப்படுத்தப்படுகின்றது.**

(D) ஒரு பல்படை பயிர்செய்கைத் தொகுதியில் (Multilayer cropping system) அடிமட்டத்திற்கும் மேல் மட்டத்திற்கும் வழக்கமாக பரிந்துரைக்கப்பட்ட தாவரங்களுக்கு முறையே ஒவ்வோர் உதாரணம் தருக.

(1) அடி மட்டம் : **மரக்கறி, மஞ்சள், இஞ்சி**

(2) மேல் மட்டம் : **தென்னை, தூரியன், அரிமரம்**

(E) சூழல் சுற்றுலா கைத்தொழிலின் நேரடியான சுற்றாடலுக்குரிய நன்மைகள் **இரண்டு** தருக.

(1) **உயிர்பல்வகைமைக் காப்பு**

(2) **சூழற்றொகுதி காப்பு**

(F) அரிமரங்களின் நிலையான பயன்பாடு மற்றும் முகாமைத்துவம் பலதரப்பட்ட பங்குதாரர்களுக்கு அதாவது உள்ளூர் சமூகம், வர்த்தக தொழில் முனைவோர், தேசிய மற்றும் பிராந்திய பொருளாதாரங்கள் மற்றும் உலகளாவிய சமூகம் உள்ளிட்ட அனைத்திற்கும் நன்மைகளைத் தரும்.

(i) இலங்கையில் மரங்களை தறித்தல் மற்றும் அதனைப் பதனிடல் ஆகியவற்றில் நேரடியாகப் பங்குகொள்ளும் அரச தாபனத்தின் பெயரைத் தருக.

**வனப்பாதுகாப்புத் திணைக்களம், அரச அரிமர கூட்டுத்தாபனம்**

(ii) அரிமர இனங்களின் மதிப்பைத் தீர்மானிக்கும் **இரண்டு** காரணிகளைத் தருக.

(1) **வலிமை, நெகிழ்வுத் தன்மை**

(2) **நிறம்**

(iii) இலங்கையில அரிமரத்தை அறுப்பதற்கு அதிகமாகப் பயன்படுத்தப்படும் **இரண்டு** முறைகளைத் தருக.

(1) **ஒரே திசையில் சமாந்தரமாக அறுத்தல்**

(2) **கான்ட் முறை**

(iv) அரிமரத்தைப் பதனிடலுக்கு பயன்படுத்தப்படும் நியம முறை ஒன்றைப் பெயரிடுக.

**நற்காப்புத் திரவத்தினுள் அமிழ்த்துதல், தூரிகையினால் நற்காப்பினைப் பூசுதல்**

இந்நிரலில் எதனையும் எழுதுதல் ஆகாது.

(G) கிராமிய ஆரம்பத் தொழிற்றுறைகளினால் பரவலாக மூலப்பொருள்களாகப் (raw materials) பயன்படுத்தப்படும் அரிமரமல்லாத (non-timber) வன வளங்கள் **இரண்டு** தருக.

(1) **பிரம்பு, மூலிகைப்பயிர்கள்**

(2) **தேன் பாணி**

(H) கைத்தொழில் மட்டத்தில் தாவரச்சாறுகளின் பயன்பாட்டினை ஊக்குவிப்பதற்கு உள்ள வரையறைகள் **இரண்டைத்** தருக.

(1) **பொருத்தமான பயிற்றப்பட்ட தொழிலாளர்கள் தேவைப்படல், அறுவடை கூடிய பேதங்கள் குறைவு**

(2) **உற்பத்திகளின் தரம் சீராகக் காணப்படாமை, தொழிலாளர் பற்றாக்குறை தொழிநுட்ப முறைகளைப் பயன்படுத்தாமை**

4\. (A) சமய நடவடிக்கைகளுக்காக பயன்படுத்தப்படும் சாற்றெண்களின் பிரித்தெடுப்பில் பயன்படும் **இரண்டு** தாவரங்களின் பெயர்களைத் தருக.

(1) **சந்தனம்**

(2) **மல்லிகை, ரோஜா, சேபாலிகா**

(B) விவசாயத்தில் பயன்படுத்தப்படும் இழிவளவிலான நிலப் பண்படுத்தலின் (minimum tillage) நன்மைகள் **இரண்டு** தருக.

(1) **தேவையான தொழிலாளர் பற்றாக்குறை, மண்ணரிப்பு நிகழாது**

(2) **செலவு குறைவு**

(C) தரை அலங்கரிப்பில் (landscape gardening) உயிர்வேலிகளுக்காக பொதுவாகப் பயன்படும் தாவர இனங்களின் **இரண்டு** முக்கியமான இயல்புகளைத் தருக.

(1) **Andhara**

(2) **Ganga werella**

(D) இலங்கையில் சக்தித் தேவையால் ஏற்படும் பிரச்சினைக்குத் தீர்வாக பயன்படுத்தக்கூடிய **இரண்டு** மாற்றுச்சக்தி முதல்களின் பெயர்களைத் தருக.

(1) **சூரிய சக்தி, காற்றின் விசை**

(2) **உயிர்த்திணிவு, உயிர்வாயு**

(E) கீழே தரப்பட்டுள்ள நொதித்தலுக்கு உட்படுத்தப்பட்ட உற்பத்திகளின் பிரதான இறுதி விளைபொருளின் பெயரைத் தருக.

(1) பியர் **எதனோல்**

(2) வினாகிரி **அசற்றிக் அமிலம்**

(F) நொதித்தலினால் கிடைக்கும் கீழே தரப்பட்டுள்ள நன்மைகளுக்கான முக்கியமான காரணத்தைத் தருக.

(i) பசும்பால் இற்கு ஒவ்வாமையைக் காட்டும் நபர்கள் யோகட்டினை உட்கொள்ளலாம்.
**இலக்ரோஸ், சீனி நீக்கப்படல்**

(ii) தென்னையின் சாற்றுடன் ஒப்பிடும்போது கள்ளு ஒரு சிறந்த ஊட்டச்சத்துள்ள பானம்
**மேலதிக சீனி அளவு குறைதல்**

(G) மீனைப் பதப்படுத்துவதற்குப் பயன்படும் நவீன மற்றும் பாரம்பரிய முறைகளுக்கு ஒவ்வோர் உதாரணம் தருக.

(1) நவீன முறை : **ஆழ்குளிரூட்டல்**

(2) பாரம்பரிய முறை : **உலர்த்தல், புகையூட்டல், ஜாடியிலிடல்**

இந்நிரலில் எதனையும் எழுதுதல் ஆகாது

(H) இலங்கையில் நன்னீரிலும் உவர்நீரிலும் செய்யப்படும் இறால் வளர்ப்பு அதிக அந்நியச் செலாவணியை ஈட்டித் தருகின்றது.

(i) வளர்ப்புக் குளத்தில் சேமித்து வைப்பதற்குப் பொருத்தமான இறாலின் வளர்ச்சிப் பருவத்தைக் குறிப்பிடுக.

**3 – 3 ½ மாதங்களுக்கிடைப்பட்ட குடம்பிகள் ( Post larva)**

(ii) குளமொன்றில் சேமித்து வைப்பதற்குப் பொருத்தமான இறால்களின் **மூன்று** இயல்புகளைத் தருக.

(1) **திடகாத்திரமான வலிமையான, வயது 2 ½ மாதுங்களாதல்**

(2) **விகாரங்கள் இல்லாதிருத்தல், பருமன் 1-2 ஆதல்**

(3) **இயற்கையான நீச்சல் கோலங்கள்**

(iii) இறால் வளர்ப்புக் குளத்தில் நடைமுறைப்படுத்தப்படக்கூடிய **மூன்று** செயற்பாடுகளைத் தருக.

(1) **இறால் அறிமுகப்படுத்தல், நீரின் தரத்தைப் பேணல்**

(2) **உணவு வழங்கல், நீர் முகாமைத்துவம்**

(3) **காற்றோட்டம், நோய்க்கட்டுப்பாடு**

(iv) குளமொன்றில் உயர் உற்பத்தித்திறனைப் பெறுவதற்காக குளத்தின் வெவ்வேறு படைகளில் வளர்வதற்காக சரியான சிறந்த வளர்ப்பு இனங்களைத் தெரிவுசெய்ய வேண்டியது முக்கியமானதாகும். குளமொன்றின் மேற்பகுதிக்கும் அடிப்பகுதிக்கும் பொருத்தமான இனங்கள் ஒவ்வொன்று வீதம் பெயரிடுக.

(1) மேற்பகுதி : **Cattla, Silver Carp**

(2) அடிப்பகுதி : **இறால், Mirigal, Normal carp**

(I) ஒரு கிராமத்தில் தெரிவு செய்யப்பட்ட 50 உறுப்பினர்களைக் கொண்டு ஒரு சமூகம் சார்ந்த கூட்டுப்பசளைத் திட்டம் உருவாக்கப்பட்டுள்ளது. ஆறு மாதங்களின் பின்னர் திட்டம் வெற்றிகரமாக நடாத்தப்பட்டதனை மதிப்பீடு செய்வதற்கான **இரண்டு** நியதிகளைப் (criteria) பெயரிடுக.

(1) **தற்சமயம் தொழிற்படு நிலையிலுள்ள பங்காளர் எண்ணிக்கை**

(2) **ஆரம்ப இலக்கு தற்போது அடைந்துள்ள நிலைமையும்.**

* *

**க.பொ.த (உயர்தரம்) – 2018**

**உயிர்வளத் தொழினுட்பவியல் (19)**

பகுதி II – கட்டுரை

**விடைகள்**

5. (i) தேசிய வனவிலங்குகள் சரணாலய முகாமைத்துவத்தில் தொழினுட்பத்தின் பயன்பாடு பற்றி கட்டுரை எழுதுக

தேசிய வன விலங்குகள் சரணாலயம் - வனசீவராசிகள் மற்றும் சுதந்திரமாகவும் சுயாதீனமாகவும் வாழ்க்கை நடத்துவதற்கான மனித தலையீட்டுடன் பாதுகாப்பு வழங்கப்படும் பிரதேசமாகும் ( 10 புள்ளிகள்)

1. விலங்குகளின் நடத்தைக் கோலங்களை மேற்பார்வை செய்வதற்காக CCTV கமராத் தொகுதியைப் பயன்படுத்துதல்
2. விலங்குகள் இருக்கும் இடங்களைக் கண்டறிய …..

   e.g: GPS/Scanner/Radar
3. சரணாலயத்தின் வரைபடத்தை கணினி மயப்படுத்தியிருத்தல் - Digital imaging
4. சுற்றுலாப்பயணிகளுக்கு தகவல் கொடுப்பதற்காக இணையத்தளத்தை பயன்படுத்தல்
5. சரணாலயத்தில் கழிவுகள், கழிவு நீரை பரிகரிப்பு செய்வதற்காக நவீன தொழினுட்பங்களைப் பயன்படுத்திக் கொள்ளல்

   e.g: பிரிந்தழியக்கூடிய பிளாஸ்ரிக், கண்ணாடி – Bio plastic
6. வனவிலங்குகள் காணப்படும் இடங்களைக கண்டறிவதற்காக தொழினுட்பங்களைப் பயன்படுத்தல்

   e.g: கடலாமைகள், மீன்களை இனங்காண – Tagging
7. சரணாலயத்தில் சேவை புரிவோருக்காக – GPS தொழினுட்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளல்
8. உலர் காலங்களில் நீர்ப்பற்றாக்குறை ஏற்படும் பிரதேசங்களுக்கு நீர் வழங்க தொழினுட்ப முறைகளைப் பயன்படுத்துதல்.

**(5 விடயங்களுக்கு 08 புள்ளிகள் 5x08 = 40 புள்ளிகள்)**

5. (ii) உச்ச இலாபத்தைப் பெறும் நோக்கத்தோடு வியாபாரமொன்றை ஆரம்பிப்பதற்குத் தகவல் தொழினுட்பத்தினைப் பயன்படுத்துவதன் முக்கியத்துவம் பற்றி விவரிக்க.

தகவல் தொழினுட்பம் - தகவல்களைக் களஞ்சியப்படுத்தல், மீண்டும் பெற்றுக் கொள்ளல் மற்றும் தொடர்பாடலுக்காக கணினித்தொகுதி அல்லது ஊடகவியல் தொகுதிகளைப் பயன்படுத்திக்கொள்ளல் ( 10 புள்ளிகள்)

1. வியாபரம் தொடர்பான தகவல்களைப் பெற்றுக்கொள்ளல்
2. உற்பத்திக்காக சந்தையின் கேள்வி மற்றும் நிரம்பல் தொடர்பான தகவல்களைப் பெற்றுக்கொள்ளல்
3. தனது வியாபாரம் தொடர்பாக சந்தையின் புள்ளிவிபரங்களைப் பெற்றுக்கொள்வதன் மூலம் வியாபாரத்திலன் இலக்கினை இனங்கண்டு சந்தைக்கு வழங்கல் மேற்கொள்வதற்கான முறைகள் தொடர்பான தீர்மானங்களை மேற்கொள்ளல்
4. அன்றாட நடவடிக்கைகளை வினைத்திறனாகவும் விரைவாகவும் செய்துகொள்ள
5. நவீன தொழினுட்பங்களைப் பயன்படுத்தி கொடுக்கல் வாங்கல்களை விரைவாகவும் முறையாகவும் செய்துகொள்ள உ+ம் ATM
6. வியாபாரம் தொடர்பாக தரப்படுத்தல் மற்றும் சட்ட திட்டங்களை அறிந்து கொள்ள
7. சந்தை தொடர்பான தீர்மானங்களைப் பெறுவதில் தேசிய மற்றும் சர்வதேச சந்தை தொடர்பான த்கவல், தொழினுட்ப பாவனையினால் விரைவாக பெற்றுக்கொள்ளல்
8. உற்பத்தி தொடர்பாக பரவலான நுகர்வோருக்கு வியாபார விளம்பரத்தைப் பெற்றுக்கொடுத்தல்
9. காலப்போக்கில் மாறுபடும் தகவல்ளை உடனடியாகப் பெற்றுக்கொள்வதனால் உற்பத்திச் செயன்முறையில் தீர்மானங்களை மாற்றிக்கொள்ளல்
10. சர்வதேச சந்தையினுள் நுழைவதற்கான வாய்ப்பினை அதிகரித்தல்
11. சந்தை வாய்ப்பு தொடர்பான தகவல்களைப் பெற்றுக்கொள்ள

***(5 விடயங்களுக்கு 03 புள்ளிகள் படி 5x03 = 15 புள்ளிகள்)***
***(5 விடயங்களை விபரிக்க 05 புள்ளிகள் படி 5x05 = 25 புள்ளிகள்)***

5. (iii) மாறிவரும் வாழ்க்கை முறைக்கேற்ப இலங்கையரின் பாரம்பரிய உணவு பழக்கங்களில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள் பற்றி விபரிக்குக

பாரம்பரிய உணவுப் பழக்கவழக்கங்கள் - நீண்ட கால பாவனை மூலம் சிறப்பானதென சமுதாயத்தினால் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள உணவு தொடர்பான பழக்கவழக்கங்களாகும்.

*(05 புள்ளிகள்)*

**ஏற்பட்டுள்ள மாற்றங்கள்**

1. சமனிலை உணவிலிருந்து விலகி மா போசணை அடங்கிய உணவுகளுக்கு பழக்கப்படல் காரணமாக விற்றமின் கனியுப்புக்கள் குறைதல்
2. தேசிய உணவு நுகர்வு குறைந்து உடன் உணவுகளுக்கு ஈர்க்கப்படல்
3. நார்ப்பொருள் கூடிய மரக்கறி, பழங்களின் பாவனை குறைதல்
4. குறை பரிகரிப்பு உணவுகளுக்கு கூடிய விருப்பத்தைக் காட்டல்
5. உடன் உணவு அதிகளவு உட்கொள்ளல்
6. பிரதேசத்தில் தாராளமாகக் கிடைக்கும் தரமான பழங்களை விடுத்து வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் பழங்களை அதிகளவில் உட்கொள்ளல்
7. இயற்கையான புதிய தானியவர்க்கங்களுக்குப் பதிலாக உடன் உணவுகளாக தயாரிக்கப்பட்டுள்ள தானிய உணவுகளின் பாவனை
8. இயற்கை தாவரப்பண்ணைகளான இளநீர், குரும்பா போன்ற பானங்களை விடுத்து செயற்கை உடன் பானங்களை நுகர்தல்
9. மாப்பொருள் உணவுகளை அதிகளவில் உட்கொள்வதால் நார்ப்பொருள் குறைவடைதல்
10. இயந்திரமயமாதல் நகரமயமாதலினால் ஏற்பட்ட அதிகரித்த வேலைப்பளுவினால் பிரதான உணவுகளைப் புறக்கணித்தல்
11. தயாரிக்க கடினமான மரக்கறி பழவகைகள் உட்கொள்வது அரிதாதல்
12. உணவு தயார்ப்படுத்த தவறான முறைகளைப் பின்பற்றுவதனால் உணவின் போசணைத்தரம் குறைவடைதல்

**(9 விடயங்களுக்கு 02 புள்ளிகள் படி 9x02 = 18 புள்ளிகள்)**
**(9 விடயங்களை விளக்குவதற்கு 03 புள்ளிகள் படி 9x03 = 27 புள்ளிகள்)**

6. (i) பயிர் உற்பத்தியில் சூழல் வெப்பநிலையின் ஆதிக்கம் பற்றி விபரிக்குக.

பயிர் உற்பத்தி – பொருளாதார இலாபமீட்டும் விதமாக பயிரின் விளைச்சலைப் பெற்றுக்கொள்ளல் (05 புள்ளிகள்)

1. ஒளித்தொகுப்பிற்கு

   வெப்பநிலை அதிகரிப்புடன் தாவரங்களில் உடற்றொழிலியற் செயற்பாடு விரைவுபடுத்தப்பட்டு உணவுற்பத்தி அதிகரிக்கும். விளைச்சல் அதிகரிக்கும்.

2. சில தாவரங்களில் பூத்தல்

   கோவா, கரட் போன்ற தாவரங்களில் பூத்தலிற்கு குறைந்த வெப்பநிலை அவசியமாகின்றது.

3. முகிழ் அரும்புதலில் செல்வாக்கு

   முகிழ் அரும்புவதற்கு பகற்கால வெப்பநிலை உயர்வாகவும், இராக்கால வெப்பநிலை குறைவாகவும் இருத்தல் வேண்டும்.

4. தாவர நோய்ப் பரம்பலில்

   உயர் வெப்பநிலையில் நோய்கள் பரவும். இதனால் உற்பத்தி குறையும்.

5. நோய்த்தாக்கம் அதிகரிக்க

   வெப்பநிலை அதிகரிப்புடன் நோயாக்கிகளின் வாழ்க்கை வட்டம் குறுகிய காலத்தில் பூர்த்தியாகி அவற்றின் குடித்தொகை அதிகரிப்பதனால் நோய்த்தாக்கம் அதிகரிக்கும்.

6. ஆவியுயிர்ப்பு அதிகரிக்கும்

   வெப்பநிலை உயர்வுடன் ஆவியுயிர்ப்பு அதிகரித்து நீர்ப்பற்றாக்குறை ஏற்பட்டு தாவரம் வாடலுக்குட்படும். உற்பத்தி குறையும்.

7. தாவர இழையங்கள் எரிவுக்குள்ளாதல்

   குறைவான வெப்பநிலை காரணமாக தாவரங்களினுள் பனி உறைவதால் தாவர இழையங்களுக்குச் சேதம் ஏற்படும்

8. ஓமோன் தொழிற்பாடு

   வெப்பநிலை உயர்வுடன் ஓமோன் தொழிற்பாடு அதிகரித்து தாவரங்களில் பூத்தல், காய்த்தல், வேர்விடல் விரைவுபடுத்தப்பட்டு உற்பத்தி அதிகரிக்கும்.

**(8 விடயங்களுக்கு 05 புள்ளிகள் படி 8x05 = 40 புள்ளிகள்)**

6. (ii) ஒரு வெற்றிகரமான தொழிலதிபர் தனது வியாபாரத்தை நிலையானதாக எவ்வாறு வைத்திருப்பார் என விளக்குக.

1. வியாபாரத்தை நிலையானதாக வைத்திருப்பதற்கு அதனை சிறப்பாக முகாமைத்துவம் செய்து கொள்ள வேண்டும்.
2. திட்டமிடல் - இலக்கு, நியதிகள், முறை மற்றும் தேவையான வளங்கள்
3. ஒழுங்கு முறைப்படுத்தல் - மனித வளங்கள்,பௌதீக வளங்கள் , மூலதன வளங்கள் மற்றும் காலத்திட்டமிடல்
4. வியாபாரத்தினை சிறப்பாக கண்காணித்தல் - தலைமைத்துவ இயல்புகளை கொண்டு நடத்தல்
5. நடைமுறைக் கட்டுப்பாடு, நியதிகளும் பரிசீலனையும்
6. விநியோசத் திட்டங்கள் தயாரித்தல்
7. உற்பத்தி மற்றும் தொழினுட்பத் திட்டங்களைத் தயாரித்தல்




8. தேவையான மனித வளத்திட்டம் தயாரித்தல்
9. அடிப்படைத் திட்டத்தைத் தயாரித்தர், அடிப்படை கூற்று தயாரித்தல், அடிப்படைத் திட்டத்தினடிப்படையில் வியாபார தீர்மானங்களை எடுத்தல்

***(5 விடயங்களுக்கு 05 புள்ளிகள் படி 5x05 = 25 புள்ளிகள்)***
***(5 விடயங்களை விளக்குவதற்கு 05 புள்ளிகள் படி 5x05 = 25 புள்ளிகள்)***

6. (iii) நீர் சூழற்றொகுதியினைப் பேண்தகு நிலையில் வைத்திருப்பதில் மனித செயற்பாடுகளின் ஆதிக்கம் பற்றி விபரிக்குக.

தம்முள் இடைத்தாக்கங்களுடன் வாழும் அங்கிக் குடித்தொகைகளையும் அவற்றின் சூழலையும் உள்ளடக்கிய நீர்நிலை நீர்சூழற்றொகுதி ஆகும். (10 புள்ளிகள்)

1. தாழ்நிலங்களை நிரப்புதல் -
   சிறிய மழையாலும் வெள்ளம் ஏற்படல். தரையினுள் உறிஞ்சப்படும் நீரினளவு குறைந்து நிலக்கீழ் நீர் குறைவடைதல்
2. காடுகளை அழித்தல் - மண்ணரிப்பு ஏற்பட்டு நீர்நிலைகளின் கொள்ளளவு குறைதல்
3. விவசாய நடவடிக்கைகள் - பசளை மற்றும் விவசாய இரசாயனங்கள் நீருடன் கழுவிச் செல்லப்பட்டு நீர்நிலைகளில் சேருதல். தற்போசணையாக்கத்துக்குள்ளாதல்
4. மாணிக்கக்கல் அகழ்வு – மண் கழுவிச்செல்லப்பட்டு நீர்நிலைகள் தரைமட்டமாதல் நீர் கலங்கலடைந்து நீர்வாழ் உயிர்களுக்கு பொருத்தமற்ற நிலைமைகள் ஏற்படல்.
5. நீர் சூழற்றொகுதிகள் இயந்திரமயமாதல் - இயந்திரங்களால் வெளியிடப்படும் எண்ணைய் வகைகள் நீருடன் சேர்தல். கப்பல் விபத்துகளின்போதான நீர் மாசடைதல், கடற்பூக்கள் பாதிக்கப்படல்
6. பலதரப்பட்ட பாதிப்பான மீன்பிடி உபகரணங்கள் மற்றும் செயற்பாடுகள் காரணமாக நீர் சூழற்றொகுதி மாசடைதல் - பொருத்தமற்ற வலைப் பாவனை
7. மணல் அகழ்ந்தெடுத்தல்
8. மீன்களைக் கொல்ல பொருத்தமற்ற முறைகளைப் பயன்படுத்துதல் - டைனமைற் போன்ற வெடிபொருட்கள்
9. பொருத்தமற்ற முறையில் நீர்வாழ் உயிரிகளை இயற்கை சூழற்றொகுதிகளுக்குச் சேர்த்தல் - உதாரணம்: பிரானா போன்ற மன்னாவா மீன்கள்
10. கடற்கரையோரப் பிரதேசங்களில் அபிவிருத்தித் திட்டங்களுக்காக கண்டற்தாவரங்களை வெட்டல்
11. கடல்நீர் நாட்டின் உட்பகுதியை அடைதல் (salt water intrution)

**(8 விடயங்களுக்கு 05 (02 + 03)புள்ளிகள் படி 8x05 = 40 புள்ளிகள்)**

7. (i) இலங்கையிலுள்ள தெரிவு செய்த பழம் ஒன்றிற்குப் பண்ணையிலிருந்து நுகர்வோரின் கைகளுக்கு கிடைக்கும் வரை ஏற்படும் அறுவடைக்குப் பின்னரான இழப்புக்களையும் அவற்றை இழிவளவாக்குவதற்கு எடுக்கும் நடவடிக்கைகளையும் விபரிக்குக.

அறுவடைக்குப் பின்னரான இழப்புக்கள் - பயிர்களிலிருந்து அறுவடை பெறப்பட்டது தொடக்கம் நுகர்வோருக்குக் கிடைக்கும் வரை விளைச்சலில் ஏற்படும் அளவு ரீதியானதும் தர ரீதியானதுமான இயல்புகள் *(10 புள்ளிகள்)*

பழம் - ஒன்றைப் பெயரிடல் *(5 புள்ளிகள்)*

**அறுவடைக்குப் பின்னரான இழப்புக்கள்**

1. அறுவடையின் போது –
2. அறுவடை சுத்தப்படுத்தலின் போது
3. அறுவடை பொதியிடலின் போது
4. அறுவடை களஞ்சியப்படுத்தலின் போது
5. அறுவடை தயார்ப்படுத்தலின் போது

(2x05=10 புள்ளிகள்)

இழப்புக்களை இழிவளவாக்குவதற்கான நடவடிக்கைகள்

- அறுவடை செய்யப்படும் நேரம்
- அறுவடை செய்வதற்கான முதிர்ச்சி சந்தர்ப்பம்
- பொருத்தமான அறுவடை முறை
- விளைச்சலைத் சுத்தப்படுத்தும் முறை
- விளைச்சலை தரப்படுத்தலும் தயார்ப்படுத்தலும்
- பொருத்தமான கொண்டு செல்லல், பொதியிடல்
- களஞ்சியப்படுத்தல் முறை

(குறிப்பிடல் 03, விபரம் 02)

(05 x 05 = 25 புள்ளிகள்)

7. (ii) தகவல் தொழினுட்பத்தைப் பயன்படுத்தும் போது ஒழுக்கவியல் நடத்தைகளை நடைமுறைப்படுத்துவதன் முக்கியத்துவம் பற்றிச் சுருக்கமாக விபரிக்குக

தகவல் தொழினுட்பத்தைப் பயன்படுத்துவதில் ஒழுக்கவியல் நடத்தைகள் - தகவல் தொழினுட்பங்களை சமூகமயப்படுத்துவோர் மூலம் சமூக விழுமியங்கள் மற்றும் சம்பிரதாயத்தின் அடிப்படையில் பொருத்தமானதென ஏற்றுக்கொள்ளப்பட்ட சம்பிரதாய குண சமூகத்துக்கேற்ப பயன்படுத்துதல் *(10 புள்ளிகள்)*

1. மனிதர்களின் அடிப்படை உரிமைகளை பாதுகாத்தல்
2. மக்களை ஆவேசப்படுத்தும் தகவல்களை வெளிப்படுத்தாது விடல். இதன் மூலம் நாட்டின் களவர நிலைமைகள் ஏற்படுவதைத் தவிர்க்கலாம்.
3. மத, இனங்களுக்கிடையில் கருத்துவேறுபாடுகள் ஏற்படாதவகையில் செயற்படல். அதன் மூலம் மத, இனங்களுக்கிடையே ஒற்றுமையை ஏற்படுதத்தல்.
4. தவறான மற்றும் விகாரமடைந்த கருத்துக்களை வெளியிடுவதைத் தவிர்த்தல். தொடர்பாடல் சாதனங்களினூடு வெளியிடப்படும் தகவல்கள் அடிப்படையில் பல திட்டங்கள், அறிக்கைகள், செயற்றிட்டங்கள், தயார்ப்படுத்தப்படுகின்றன. அத்தகவல்கள் தவறும்போது அதனடிப்படையில் உருவாகும் சகல திட்டங்களும் அறிக்கைகளும் பிழைத்துவிடும்.
5. அவசியமின்றி தனியார் தகவல்களை துப்பறிதல் மற்றும் அவசியமற்ற தனியார் தகவல்களுக்கு பிரவேசித்தலைத் தவிர்த்தல்
6. நாட்டின் விழுமியங்களுக்கு பாதிப்பு ஏற்படாத வகையில் தகவல் தொழினுட்பங்களைப் பயன்படுத்தல்
7. தகவல் தொழினுட்பத்திற்கு திருத்தமான தகவல்களை பெற்றுக்கொடுத்தல்

**(5 விடயங்களுக்கு 08 புள்ளிகள் படி 5x08 = 40 புள்ளிகள்)**

7. (iii) இலங்கையில் நாளாந்த வாழ்க்கையில் உருவாகும் கழிவுகளை முகாமைத்துவம் செய்யும் போது 3R எண்ணக்கருவைப் பிரயோகித்தலை உதாரணங்களுடன் விபரிக்குக.

கழிவுகள் - உடன் பாவனைக்குப் பொருத்தமற்ற விளைவுகள் அல்லது நுகர்வுச் செயன்முறையின் பக்க விளைவுகள்

கழிவுகளை முகாமைத்துவம் செய்யும் 03 முறைகளாக **3 R** எண்ணக்கரு முக்கியத்துவம் பெறுகின்றது. **(10 புள்ளிகள்)**

1. கழிவு தோன்றுவதைக் குறைத்தல் (Reduce)
   - கொள்வனவு செய்யும் போது கழிவுகளை குறைத்துக்கொள்ளல்

     உ+ம்: மீன் கொள்ளளவு செய்யும் போது உணவாகக் கொள்ளப்படும் பகுதிகளை மாத்திரம் கொள்வனவு செய்தல்

     பொதிகளை தவிர்த்தல் உ+ம்:
   - உயிரியல் பிரிந்தழிகைக்குட்படாத பதார்த்தங்களின் பாவனையை இழிவுப்படுத்தல்
   - தனிப்பொதியிடலுக்குப் பதிலாக பல பொருட்கள் ஒன்றாக பொதியிடப்பட்டுள்ளவற்றைக் கொள்வனவு செய்தல்

   பண்டங்களை மொத்தமாக கொள்வனவு செய்வதன் மூலம் பொதியிடல் பதார்த்தங்களைத் குறைத்துக்கொள்ளலாம். உ+ம்:

2. மீள் பாவனை (Reuse)
   - ஏதேனும் பண்டங்களை அல்லது உபகரணங்களை ஒதுக்க முன் இயன்றவரை பயன்படுத்துதல்
   - கடதாசி, பிளாஸ்ரிக் பொதிகள், கட்டடப்பொருட்கள் போன்ற சகல பண்டங்களையும் மீள் பாவனைக்குட்படுத்துதல்

3. மீள்சுழற்சி (Recycle)
   - கழிவுப்பொருட்களிலுள்ள அடிப்படைப் பதார்த்தங்களை மீள்சுழற்சி செயன்முறைக்குட்படுத்தல்
   - தேவையற்ற பொருளென ஒதுக்கப்படும் பண்டங்களை பலதரப்பட்ட பரிகரிப்புக்குட்படுத்தி முன்னர் காணப்பட்ட நிலையிலேயே மீண்டும் பாவனைக்கு ஏற்றவகையில் மாற்றியமைத்தல்
   - கழிவுப்பொருட்களை பௌதிக, இரசாயன, உயிரியல் மாற்றங்களுக்குட்படுத்தி மீண்டும் பயன்படுத்தல உ+ம்: பொலிதீன், கடதாசி, உலோகம்

**ஒரு எண்ணக்கருவிற்கு குறிப்பிடல் - 05 x 3= 15 புள்ளிகள்**

**விபரம் 5x03= 15 புள்ளிகள்**

**உதாரணம் : 05 x 3 = 15 புள்ளிகள்**

## பகுதி C

8. (i) மென்மையான தொழில்நுட்பங்களை ஏன் தொழிலாளர் தீவிர (Labour intensive) மற்றும் முதலீட்டு விரிவான தொகுதிகளாக ( Capital intensive ) வகைப்படுத்தியிருக்கிறார்கள் என்பதனை விளக்குக

1. மென் தொழில்நுட்பம் வரைவிலக்கணப்படுத்தல்
2. தொழிலாளர் தொகுதிகள்
3. முதலீட்டு விரிவான தொகுதிகள்

பல்வேறு விரிவான தொகுதிகள் மற்றும் அவற்றுக்கு மென் தொழினுட்பப் பிரயோகம் மூலம் வகைப்படுத்தல்

விபரித்தல் - தொழிலாளர் தீவிர மற்றும் முதலீட்டு விரிவான தொகுதிகளின் பயன்பாடு

தொழினுட்ப முறைகள் அறிமுகம் 10 புள்ளி
தொழிலாளர் தீவிர முறை விளக்கம் 10 புள்ளி
முதலீட்டு விரிவான முறை விளக்கம் 10 புள்ளி
மென் தொழினுட்ப பயன்பாடு 20 புள்ளி

8. (ii) இலங்கையில் ஒரு கிராமத்தில் எவ்வாறு ஒரு சூழல் சுற்றுலாத் திட்டத்தை உருவாக்கலாம் என்பதனை விளக்குக

சூழல் சுற்றுலா எனப்படுவது சூழலை அடிப்படையாக கொண்ட சுற்றுலாத்துறை ஆகும்

*(10 புள்ளிகள்)*

**திட்டமிடல் செயன்முறை**

1. குறிக்கோள்களைத் தீர்மானித்தல்
2. சாத்தியக்கூற்றுக் கற்கை
3. வளங்களை இனங்காணல்
4. செயற்படு திட்டம் தயாரித்தல்
5. காலவரையறைகளை குறிப்பிடல்
6. ஒழுங்கமைப்பைத் தயாரித்தலும் உதவு சேவைகளும்
7. பிரசார வேலைத்திட்டத்தைத் தீர்மானித்தல்

**(5 விடயங்களுக்கு 08 புள்ளிகள் படி 8x05 = 40 புள்ளிகள்)**

8. (iii) அரிமரங்களைப் பாதுகாப்பதற்கான தொழினுட்பமொன்றை விபரிக்குக

வரைவிலக்கணம்:
அரிமரத்தைப் பாதிக்கும் காரணிகளிலிருந்து அரிமரத்திற்கு ஏற்படும் பாதிப்பை இழிவுபடுத்திக் கொள்வதற்காக மேற்கொள்ளப்படும் நடவடிக்கைகள் அரிமர பாதுகாப்பு தொழினுட்பங்கள் எனப்படும். **(10 புள்ளிகள்)**
தேசமடைவதற்கு ஏதுவான காரணிகளாக பங்கசு, கறையான்கள், பீடைகள், தீ என்பனவற்றைக் குறிப்பிடலாம்.
மேற்படி அரிமரச்சேதமாக்கிகளுக்கு எதிராக தடையியல்பை விருத்தி செய்து கொள்வதற்கு நற்காப்பிகள் பயன்படுத்தப்படும்.
உ+ம்: தார், தார் கலந்த எண்ணெய், சேதனப் பதார்த்தங்கள், நீரகற்றி வகைகள் **(10 புள்ளிகள்)**

**அரிமரங்களைப் பாதுகாப்பதற்கான தொழிநுட்பங்கள்**

1. தூரிகையால் பூசுதல்
   - சேதனக் கரைசல்கள் தூரிகையால் பூசப்படும்
   - பூச்சு பூசுவதற்காகப் பயன்படுத்தப்படும் தூரிகை பயன்படுத்தப்படும்
   - பலதடவைகள் நற்காப்புப் பதார்த்தங்கள் பூசப்படும்
   - முதலாவது தடவை பூசி உலர்வதற்கு முன்னதாக இரண்டாவது தடவை பூசப்பட வேண்டும்.
2. சிவிறல்
   - இங்கு சேதனப் பதார்த்தங்களுள்ள நற்காப்பிகள் பயன்படுத்தப்படும்
   - பலதடவை அரிமரம் மீது வீசப்படும்
   - சிவிறல் இயந்திரம் பயன்படுத்தப்படும்
   - முதலாவது தடவை உலர முன் இரண்டாவது தடவை சிவிறப்படும்.
3. அமிழ்த்துதல்
   - நற்பாப்புப் பதார்த்தம் அடங்கிய கரைசலினுள் அமிழ்த்தி வைக்கப்படும்
   - சேதனக் கரைசலில் கரைக்கப்பட்ட நற்காப்புப் பதார்த்தங்கள் மற்றும் கிறியோசோட் இதற்காகப் பயன்படுத்தப்படும்
   - மூன்று நிமிடங்களிலிருந்து சில மணித்தியாலங்கள் வரை கரைசலில் அமிழ்த்தி வைக்கப்படும்.
4. வெப்பமேற்றிக் குளிரூட்டும் முறை
   - அரிமரம் நற்காப்புக் கரைசலினுள் அமிழ்த்தப்படும்
   - கரைசலம் அரிமரமும் $80^{0}C$ வரை வெப்பமேற்றப்படும்
   - பின்னர் அவை குளிர விடப்படும்
   - இதனை விரைவாகச் செய்வதற்காகச் சூடானதும் குளிரானதுமான இரண்டு கரைசல்கள் கொண்டு அரிமரம் அக்கரைசலுக்கு மாற்றப்படும்
   - தூரிகை மூலம் பூசுதல், சிவிறலுடன் ஒப்பிடும் போது கூடியளவு நற்காப்புப் பதார்த்தத்தை அரிமரத்தினுள் புகுத்தக்கூடியதாக இருக்கும்
   - கம்பித் தூண்கள் செய்வதற்காகப் பயன்படுத்தப்படும்.
5. பரவல் முறை
   - அரிமரங்களில் 50% அளவு ஈரலிப்பு காணப்படும் போது பயன்படுத்தப்படும்.
   - செறிந்த போரெக்ஸ் அல்லது போரிக் அமில கரைசலினுள் அமிழ்த்தப்படும்
   - பரவல் மூலம் அரிமரத்தினுள் இரசாயனப்பொருள் செறியும்
   - பின் உலர்வதைத் தாமதப்படுத்த வெளியே எடுக்கப்பட்டு அரிமரங்கள் ஒன்றன் மீது ஒன்றாக அடுக்கி வைக்கப்படும்.
6. அமுக்க வெற்றிடப் பரிகரிப்பு
   - அரிமரத்தினுள் அமுக்கத்தைக் குறைத்து புறத்தேயுள்ள கரைசலின் அழுத்தத்தை அதிகரித்தல்
   - அரிமரத்தினுள் வினைத்திறனாக இரசாயனப் பதார்த்தங்களை செலுத்தும்.
   - கிறியோசோட் பயன்படுத்தும் போது வெப்பமாக்கியொன்று பயன்படுத்தப்படும்

**(முறையாக விளக்கியிருந்தால் 30 புள்ளிகள்)**

9. (i) இயற்கையான காட்டிலிருந்து தேனீக்களின் தேனைப் பிரித்தெடுப்பதற்கான பொருத்தமான வழிகளைப் பற்றி விளக்குக

1. இயற்கையான காடுகளில் நிகழ்வது இயற்கை தேன் உற்பத்திச் செயன்முறையாகும். எனவே இயற்கையான சூழலில் உற்பத்தியாகும் தேனைப் பிரத்தெடுக்கும் போது அச்சூழலால் தாங்கிக்கொள்ளக்கூடிய மட்டத்தைத் தாண்டிவிடக்கூடாது.

2. இயற்கையான சூழலில் தேனீக்களுக்கும் ஏனைய ஏனைய விலங்குகளுக்கும் பாதிப்பு ஏற்படாத வகையிலான பிரித்தெடுப்பு வழிமுறைகளைப் பின்பற்றவேண்டும்
   உ+ம்: புகையூட்டல்

3. பிரித்தெடுக்கப்படும் பிரதேச தாவரங்கள் அல்லது இயற்கையான பௌதிக வளங்களுக்கு ஏற்படும் பாதிப்பு இழிவாகும் வகையில் தேன்கூட்டினைப் பிரித்தெடுக்க வேண்டும்
   உ+ம்: தாவரங்களை வெட்டி சாய்க்காது விடல்

4. புதிய கூடுகள், தேன் கொண்டிராத கூடுகளை அழிக்காது விடல்

5. தேன் கிடைக்கும் பருவங்களில் மாத்திரம் தேனைப் பெற்றுக்கொள்ளல்.

**(5 விடயங்களைக் குறிப்பிட்டு விபரித்தால் 5x10 = 50 புள்ளிகள்)**

9. (ii) வியாபாரக் கைத்தொழிலில் அழுகலடையச் செய்தல் செயன்முறையை (rotting process) பயன்படுத்துவதன் சாத்தியம் பற்றி விபரிக்குக

தாவரப் பட்டையிலிருந்து இலையிலிருந்து அல்லது வேறு பாகங்களிலிருந்து தும்பு பிரித்தெடுப்பதற்காக நீரில் ஊறவைத்து நுண்ணங்கித் தொழிற்பாட்டிற்குட்படுத்தல் அழுகலடையச்செய்தல் எனப்படும்

(10 புள்ளிகள்)

**அழுகலடையச்செய்தல் செயன்முறையைப் பயன்படுத்துவதன் சாத்தியம்**

1. பலதரப்பட்ட தாவர வகைகளின் நார் வியாபாரக் கைத்தொழிலில் பயன்படுத்தப்படுகின்றது. உ+ம்: கயிறு, மெத்தை, தும்பு, பாய் போன்றன வியாபாரக் கைத்தொழிலில் உற்பத்தி செய்யப்படுகின்றன. இதற்கான தும்பினைப் பெற்றுக்கொள்வதற்காக தேங்காய் மட்டையை ஊறவைத்தல் அவசியமாகின்றது.
2. அழுகலடையச்செய்தலின் போது நுண்ணங்கித் தொழிற்பாட்டினால் இலிக்னின் கரைவதுடன் எஞ்சும் நார் பகுதிகள் (உ+ம்: தும்புச்சோறு) சாடி ஊடகக் கலவை மற்றும் வேறு உற்பத்திகளில் பாரியளவில் பயன்படுத்தப்படும்.
3. அலங்காரப் பொருட்களுக்காகவும் உயர் கேள்வி காணப்படுகின்றது. அதற்காக அழுகலடைதல் தொழினுட்பத்தைப் பயன்படுத்திக்கொள்ளல். உ+ம்: தாவர இலை நரம்புகள் எஞ்சியிருக்க ஏனைய பகுதிகளை நீக்கல்.
4. பாய் மற்றும் பிரம்பாலான பொதிகளைத் தயாரிக்க அழுகலடையச் செய்தல் அவசியமாகும். இதற்கு இத் தொழினுட்பம் பயன்படுத்தப்படும்.
5. அன்றாடப் பாவனைக்கான பைகள், சூழல் நேய பைகளுக்காக உயர் கேள்வி நிலவுகிறது
6. மருத்துவத்துறையில் பயன்படுத்தப்படும் linen க்காக Hax தாவரத்திலிருந்து நார் பிரித்தெடுப்பதற்காக பாரிய அளவில் இத்தொழில் நுட்பம் பயன்படுத்தப்படல்.
7. சுவரலங்காரம் போன்ற அலங்காரப் பொருட்களுக்காக பலதரப்பட்ட அழுகலடையச்செய்தல் மூலம் பெறபடும் நாரிற்கு அதிகமாக கேள்வி உண்டு.

**சாத்தியத்தை விளக்கல் - 5 விடயங்களுக்கு 08 புள்ளிகள் படி 5x08 = 40 புள்ளிகள்)**

9. (iii) விவசாயத்தில் பயன்படுத்தப்படும் சூழலுக்கு நேயமான அறுவடைக்குப் பிந்திய தொழினுட்பங்களை பயன்படுத்துவதன் அனுகூலங்களையும் பிரதிகூலங்களையும் விளக்குக

சூழல் நேயமான அறுவடைக்குப் பிந்திய தொழினுட்பம் என்றால் மண், நீர், உயிர்ப்பல்வகைமைக்கு பாதிப்பு ஏற்படாத வகையில் பயிர் அறுவடை செய்தது தொடக்கம் நுகர்விற்குப் பெறும்வரை அறுவடைக்கு மேற்கொள்ளப்படும் அறுவடைக்குப் பிந்திய தொழினுட்ப முறைகளாகும்.

(10 புள்ளிகள்)

**அநுகூலங்கள்**

1. அறுவடையை மேற்கொள்ள இயந்திரப் பாவனையைக் குறைப்பதன் மூலம் வளிமண்டலம் மாசடைதலைக் குறைக்கலாம்
2. இயந்திரங்களால் மண்ணிற்கும் நீரிற்கும் எரிபொருள் கலக்கப்படல் தவிர்க்கடும்.
3. அறுவடையைப் பொதிசெய்ய இயற்கையான பொருட்கள் மற்றும் விரைவில் பிரிந்தழியும் பதார்த்தங்களைப் பயன்படுத்துவதன் மூலம் சூழலில் சேரும் பிரிந்தழியாத திண்ம கழிவுப்பெருட்களின் அளவு குறையும்.
4. சூழல் நேய முறையில் அறுவடையை களஞ்சியப்படுத்தல் மூலம் களஞ்சியப்படுத்தலுக்கான செலவு குறையும்
5. சூழல் நேய இயற்கையான பொதியிடல் மூலம் கழிவு முகாமைத்துவம் இலகுபடுத்தப்படும்.

**(4x05 = 20 புள்ளிகள்)**

**பிரதிகூலங்கள்**

1. இயந்திரப்பாவனையின்மை அல்லது குறைவினால் வர்த்தக செய்கை நிலங்களில் அறுவடைக்குக்கு நீண்ட காலமும் உழைப்பும் தேவைப்படல்
2. அறுவடை செய்வதன் வினைத்திறன் குறைதல்
3. இயற்கையான பொதியிடல் பதார்த்தங்களைப் பயன்படுத்துவதன் மூலம் அறுவடை இழப்பு கூடி வீண் விரயம் எற்படும்.
4. சூழல் நேய முறையில் அறுவடை களஞ்சியப்படுத்தல் மூலம் முறையான அறுவடைக்குப் பிந்திய தொழினுட்பங்கள் மேற்கொள்ளப்படாமையினால் அறுவடை இழப்ப ஏற்படல்
5. சூழல் நேய களஞ்சியப்படுத்தல் பெரிய அளவில் கடைப்பிடிக்க பொருத்தமற்றது.

**(4 x 5 = 20 புள்ளிகள்)**

10. (i) சூழலியல் தரை அலங்கரிப்புத் (Ecological landscape) திட்டமொன்றைக் தயாரிப்கும் பொது கவமத்திற்கொள்ள வேண்டிய காரணிகள் பற்றி விபரிக்குக

சூழலியல் தரை அலங்கரிப்பு என்றால் மிகக் குறைந்தளவில் இயற்கையான தரைத்தோற்றத்தை மாற்றியமைத்து தயார் செய்யப்படும் தரையாகும். **(10 புள்ளிகள்)**

1. சூழற் சமனிலை பேணப்பட வேண்டும்.
2. மனித தேவைகளைப் பூர்த்தி செய்ய வேண்டும்
3. நிலப்பயன்பாடு
4. தாவர மற்றும் விலங்குக் குடித்தொகைகளை பொருத்தமான இடங்ளில் ஸ்தாபித்தல்
5. பயன்படுதன்மை மற்றும் நிலைபேறான தன்மையை கொண்டிருத்தல்
6. இடத்துக்குப் பொருத்தமாகக் காணப்படல்

**(5 விடயங்களுக்கு 08 புள்ளிகள் படி 8x05 = 40 புள்ளிகள்)**

10. (ii) இலங்கையின் பொருளாதார அபிவிருத்திக்காக தாவரச்சாறுகள் பயன்பாடு வர்த்தகமயப்படுத்தலுக்கு உட்படுவதன் முக்கியத்துவத்தை விளக்குக

தாவரச் சாறு என்றால் தாவரப் பகுதிகளிலிருந்து தொழினுட்ப முறைகளைப் பயன்படுத்தி பிரித்தொடுக்கப்படும் பதார்த்தமாகும் ***(10 புள்ளிகள்)***

***தாவரச் சாறுகள் பயன்பாடு வர்த்தகமயமாதலுக்கு உட்படுவதன் முக்கியத்துவம்***

1. அரிதான மருத்துவ பெறுமதி வாய்ந்த தாவரச்சாறுகள் பயன்பாடு மக்கள் மத்தியில் பிரபல்யம் பெறல் மற்றும் உயர் கேள்வி
2. தாவரச்சாறுகளுக்கு உயர் பெறுமதி காணப்படுவதன் மூலம் இலாபம் அதிகரித்தல்
3. தாவரச்சாறு உற்பத்திகளை ஏற்றுமதி செய்வதனால் அந்நிய செலாவாணியை சம்பாதிக்கலாம்.
4. தாவரச்சாறுகளிலிருந்து உற்பத்தி செய்யப்படும் பீடை நாசினிகள் விவசாயிகள் மத்தியில் இலகுவில் பிரபல்யப்படுத்தலாம்.
5. உணவுற்பத்தியில் பயன்படுத்தக்கூடிய தாவரச்சாறு உற்பத்திகளை சந்தைக்கு விடுவதன் மூலம் நுகர்வோர் மத்தியில் அவ்வுற்பத்திகளுக்குள்ள கேள்வியை அதிகரித்து இலாபத்தை அதிகரித்துச்கொள்ளலாம்.
6. தாவரச்சாறுகளை பலதரப்பட்ட சந்தைகளுக்கு விடுவதற்காக கைத்தொழில் மட்டத்தில் உற்பத்திகள் உருவாவதன் மூலம் நாட்டினுள் தொழில்வாய்ப்பு அதிகரிக்கும்.
7. தாவரச்சாறுக்குள்ள கேள்வி அதிகரிப்பதன் மூலம் அத்தாவரத்தை செய்கை பண்ணுவதற்குரிய ஆர்வம் அதிகரிப்பதன் மூலம் வருமானம் அதிகரிக்கும்.

***(5 விடயங்களுக்கு 08 புள்ளிகள் படி 5x08 = 40 புள்ளிகள்)***

10. (iii) இலங்கையிலுள்ள மீன்பிடித்துறைக்குப் பயன்படும் பல்வேறு மீன்பிடிச் சாதனங்களை விபரிக்குக

**மீன்பிடிச் சாதனங்கள்**

உள்நாட்டு நீர்நிலைகள் அல்லது கடலில் மீன்பிடி நடவடிக்கைகளுக்காகப் பயன்படுத்தப்படும் உபகரணங்கள் மீன்பிடிச் சாதனங்கள் எனப்படும்.

பயன்பாட்டினடிப்படையில் மரபுரீதியானவை, நவீனமயமானவை என மீன்பிடி சாதனங்கள் வகைப்படுத்தலாம். **(8 புள்ளிகள்)**

**மரபு ரீதியான சாதனங்கள்**

**அத்தாங்கு** – குளம் அல்லது ஓடைக்கு வரையறுக்கப்பட்ட மீன்களைப் பிடிப்பதற்காகப் பயன்படுத்தப்படும் எளிய சாதனமாகும்.

**அடைப்பு வலை** – நீர் வடிந்து செல்லும் கால்வாய் அல்லது ஓடைக்கு குறுக்காக அடைப்பு வலை இடப்படும். அதனுள் செல்லும் மீன்களால் மீண்டுவரமுடியாது.

**வீச்சு வலை** – ஆறுகள், நீர்த்தேக்கங்களில் மீன்பிடிக்கப் பயன்படுத்தப்படும். ஓரங்களில் சுமைகள் கட்டப்பட்ட வலை விரிக்கப்பட்டு அதனுள் அடைபடும் மீன்கள் பிடிக்கப்படும்

**தூண்டில்** - தூண்டிற்கம்பிற்கு கொழுக்கியொன்றும் இரையும் கட்டி தயாரித்துக் கொள்ளப்படும்

**கரப்பு** – ஆழங்குறைவான உவர்நீர் மீன்பிடிக்காகப் பயன்படுத்தப்படும். தடிகளால் சுற்றப்பட்ட குடையைப் போன்றது.

**Mas athu** – களப்பு, ஆற்று முகங்களையண்டிய இடங்களில் மரக்கிலங்களால் சுற்றிவளைத்து அதற்கு மீன்கள் வரச்செய்யப்படும். அதன் மீது அல்கா வளரும். செயற்கை உணவு இடலாம். அவசியமேற்படும் போது சுற்றிவறைத்து மீன்கள் பிடிக்கப்படும்.

**செவுள்வலை** – நைலோன் வலைக்கு செவுளிகள் சிக்கிக் கொள்ளும். கண் சுர்மைக்கமைய பிடிபடும் மீன்கள் தீர்மானிக்கப்படும்.

**கம்பிலி வலை** – ஆழ்கடலில் உபயோகிக்கப்படும். கம்பிலியைப் போன்ற மீன் கூட்டத்தை சுற்றி வளைத்து பிடிப்பப்படும்.

**நீள் தூண்டில்** - ஆழ்கடலில் பெரிய மீன்கள் குறி வைக்கப்படும். பிரதான தங்கூசி வலை, கிளை வலைகள் மற்றும் தூண்டில் கொழுக்கி பயன்படுத்தப்படும். மிதக்கும் நீள்தூண்டில் மற்றும் தொங்கும் நீள்தூண்டில் என இருவகைப்படும். கெலவல்லா, சுறா போன்ற மீன்களுக்காக பயன்படுத்தலாம்.

**முப்புரி வலை**- வலை மூன்று படைகளுடையது. விசேடமாக இறால் மற்றும் கடலின் அடியில் வசியும் மீன்களைப் பிடிப்பதற்காகப் பயன்படுத்தப்படும். வலையில் சிக்கிய மீன்கள் பின்னர் பிடித்தெடுக்கப்படும்.

**கரைவலை** – ஆழமற்ற கரையையண்டிய கடற்பிரதேசத்தில் பயன்படுத்தப்படும். இயந்திரப்படகினால் வலையை விரித்து கரைவலையின் இருபுறமுள்ள கயிறுகளினால் கரையிலிருந்து இழுக்கப்படும். வலையிழுப்பதற்கு ஏராளமான எண்ணிக்கையில் மனிதர்கள் பயன்படுத்தப்படுவர்.

**(7 சாதனங்களை விளக்க 7x06 = 42 புள்ளிகள்)**